27th September 1958]

**Sri K. RAMACHANDRAN** : வருஷா வருஷம் இத்தனை ஸ்டட் புல்கள் சப்ளை செய்யவேண்டுமென்று டார்ஜட் இருக்கிறதா ? அதன்படி கோவப்பரேடிவ் சொசைட்டிகளுக்கு மட்டும்தான் கொடுக்கப்படுகிறதா ? அல்லது தனிப்பட்டவர்களுக்கும் கொடுக்கப்படுகிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : தனிப்பட்டவர்களுக்கும் இது கொடுக்கப்பட்டு வருகிறது. கோவாப்பரேடிவ் சொசைட்டிக்கு என்று ஒன்றும் டார்ஜட் இல்லை.

*Khadi Sales Depots*

* 583 *Q.*—**Sri A. VEDARATHNAM** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

இந்த மாகாணத்தில் எந்தெந்த இடங்களில் அரசாங்கக் கதர் விற்பனை ஸ்தாபனங்கள் இருக்கின்றன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : A list[a] of places where Government Khadi Sales Depots are functioning and another list of production centres where Khadi is also sold to the public are placed on the table of the House.

**Sri A. VEDARATHNAM** : இப்பொழுது ஆரம்பித்திருக்கும் சென்டர்கள் எல்லாம் லாபகரமாக நடந்து வருகின்றனவா ? இல்லையானால், அவைகள் லாபகரமாக நடக்கும்படிச் செய்வதற்கு என்ன முயற்சி எடுத்துக்கொள்வார்கள் ? இந்த சென்டர்களை விஸ்தரிப்பதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா ? அரசாங்கத் திட்டத்திலே வைத்திருக்கும் லிஸ்டிலிருந்து, டிசைன்கள் தயாரிப்பதற்காக ஒரு சென்டர்தான் ஏற்படுத்தப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. காதியில் நல்ல டிசைன்கள் இல்லை என்று குறைகள் கூறப்படும் காரணத்தால், டிசைன்களை இன்னும் அபிவிருத்தி செய்வதற்கான முயற்சிகள் ஏதேனும் எடுத்துக்கொள்ளுமா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இதிலே லாபகரமாக நடக்கக்கூடியது ஒன்றும் இல்லை. நஷ்டம் இல்லை என்றும் சொல்லலாம். காதி உற்பத்தி நிலையங்களை விஸ்தரிக்க வேண்டும் என்பதுதான் நோக்கம். அப்படி விஸ்தரிக்கப்பட்டு வருகிறது. டிசைன்கள் தயாரிக்கும் சென்டர்களையும் இன்னும் அதிகப்படுத்தவேண்டும் என்பதும் யோசனையில் இருக்கிறது.

*Supply of Service stamps to Legislators*

* 584 *Q.*—**Sri S. LAZAR** : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to supply Government Service stamps for the use of the Legislators?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : No, Sir.

**Sri S. LAZAR** : உலகத்திலேயுள்ள அநேக பார்லிமெண்டுகளிலே இந்த வழக்கம் இருந்து வருகிறதாகவும், அதைப் பரிசீலனை செய்யுமாறும் சர்க்காருக்கு அங்கத்தினர்களிடமிருந்து ஏற்கனவே கோரிக்கை வந்துள்ளதா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இதை விசாரித்துப் பார்த்ததில், இந்தியாவிலேயே பம்பாயில் மட்டும்தான் ஸ்டாம்புகளுக்காக மாதத்திற்கு ஐந்து ரூபாய் வீதம் கொடுக்கப்படுகிறது. இதைப் பற்றி இங்கு கவனிக்க வேண்டிய அவசியம் இல்லை என்று தோன்றுகிறது.

---

[a] Printed as Appendix VIII on pages 887–888 infra.